11th December 1961]

*Evening Schools*

* 2239 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI): கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சம்பாதித்துக்கொண்டே படிப்பதற்காக மாலைநேரப் பள்ளிகளும், கல்லூரிகளும் நிறுவும் திட்டம் குறித்து மத்திய அரசாங்கத்தார், இந்த ராஜ்ய அரசாங்கத்தாரை கலந்து ஆலோசித்ததா ?

(இ) அதுபற்றி இந்த அரசாங்கத்தின் கொள்கை என்ன ?

(உ) அதுபற்றி என்ன நடவடிக்கை எடுக்கப்படுகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir. The Government of India consulted this Government on a scheme of correspondence courses and evening colleges.

(*b*) & (*c*) : This Government are not in favour of introducing such a scheme.

SRI S. M. ANNAMALAI : ஸார், பெண்களுக்கு இந்தச் சலுகை தரப்பட்டிருக்கிறது—அதாவது தனியாகப் படித்து எஸ்.எஸ்.எல்.ஸி. வரை பாஸ் செய்வதற்கு. அப்படியானால் ஆண்களை ஏன் புறக்கணிக்கவேண்டும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் கேள்வி ஈவினிங் காலேஜஸ், ஈவினிங் ஸ்கூல்ஸ் பற்றியது. ஈவினிங் காலேஜ்ஸ், ஈவினிங் ஸ்கூல்ஸ் பெண்களுக்குத் தனியாக இல்லை.

SRI K. VINAYAKAM : Sir, what are the valid reasons which actuated this Government not to accept such a kind of scheme which is working pretty well in foreign countries like U.S.A. and other countries?

THE HON. SRI C. SUBRAMANIAM : The view of the Government is, that it is not necessary to introduce such a scheme as even now the standard of college education all over the country is stated to be not up to the mark. It is felt that the standard will deteriorate if instructions were to be provided by evening classes or by postal tuition. At present there is no dearth of degree holders in the State and amongst whom there is acute shortage of employment. The Government felt that the introduction of evening class and postal tuition may accentuate the trouble.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, படித்தவர்களையும், அதேபோல கல்லூரி, மேல் நிலைக் கல்வி படித்தவர்களையும் அதிக அளவு உற்பத்தி செய்வது நல்லதல்ல என்று கருதினாலும், தொழில் துறைக் கல்வியில் முன்னேற்றம் அடைவதற்கு இந்த மாதிரி மாலை நேரக் கல்வி வகுப்புகள் ஏற்படுத்தும் வகையில் திட்டமிடப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தத் திட்டத்தை ஆலோசிக்கலாம். அடுத்த மந்திரி சபை இதைப்பற்றி கவனிக்கும் என்று நம்புகிறேன்.